அன்பைக் காட்டிலும் அதிகமான அன்பைக் கணவனைச் சேர்ந்தவர்களின் மீது வைத்து இருப்பார்கள்.

பதிவிரதைகள் வேகமாய் நடக்காமல், துஷ்டமாதருடன் சேராமல், கணவனை விட்டுக் காரணமின்றிப் பிரியாமல், தென் முகமாய் நின்று கூந்தலை அலங்கரித்துக் கொள்ளாமல், பிறர் வீட்டுக்குச் செல்லாமல் இருக்க வேண்டும். தாஸிகள் இந்திர ஜாலக்காரர், மந்திரவாதிகள், வஞ்சகர், காமிகள், துஷ்டர்கள் இவர்களுடைய கண்மார்க்கத்தில் பதிவிரதைகள் நிற்கலாகாது. துன்பங்களையும், அவமானத்தையும், செல்வஹானியையும் விளைவிக்கக் கூடிய வழிகளில் செல்லலாகாது. இவ்விதமாய் நற்குணங்களில் நின்று புலன்களின் வேகத்தை யடக்கிவரும் மாதர்களே பதிவிரதைகள் என்று யாவரோராலும் புகழப் படுவார்கள்.

இப்படிப்பட்ட நற்குணங்களுக்கு இருப்பிடமாயுள்ள கற்புவாய்ந்த மாதர்களும் சாஸ்திரங்களைக் கற்றுத் தர்ம வழி யில் நிலைபெற்று இருக்கும் அந்தணர்களும், க்ஷத்திரிய தர்ம முறைப்படி பிரஜைகளைக் காப்பாற்றி வரும் மன்னவர்களும் நிறைந்திருக்கும் பூமியே சுவர்க்கத்துக்குச் சமமாகும். இவை களே சகல வேத வேதாங்கங்களின் உட்கருத்து என்று தியாக ராஜர் உபதேசித்ததைக் கேட்டவாவனைவரும் வியப்படைந்து மெய்ம்மறந்து கொஞ்ச காலம் பதுமைகள் போல் இருந்து களித்துப் பரமேசனைப் போற்றி மகிழ்ந்தார்கள்.

தடவரியா தனம் போற்றி கருணை பொழி முகம் போற்றி
　　தயங்கோர் பாகம்
மடவால் மெல்லியல் போற்றி மன்னு
　　மிளங்கேசய் போற்றி மலர்க்கண் போற்றி
திடவுலக மேத்து கதிர் வாள் போற்றி
　　நிறைசேல் வத்தியாகராஜர்
நடவு திருந்தேர் போற்றி நம்மை
　　யாட் கொளும் சபா நடனம் போற்றி.



# ஸ்ரீ தியாகராஜ லீலைகள்

## இரண்டாம் பிரிவு—முதல் பாகம்

## சிறப்புப் பெயர் அகராதி.

